# கௌரி கல்யாணம்



திருமதி பார்வதி அவர்கள்

எங்கள் தாயார் **திருமதி பார்வதி** அவர்களின் ஆன்மிக ஈடுபாடுகளில் உற்ற துணையாகவும், ஆதரவும் கொடுத்த எங்கள் தகப்பனார் திரு. **R. தியாகராஜன்** அவர்களுக்கும், இந்நூல் வெளியிட உறுதுணையாக இருந்தவர்களுக்கும், நூலை அழகாக அச்சிட்டுக் கொடுத்த ஸ்ரீ லக்ஷ்மி ஆர்ட் பிரிண்டர்ஸ் அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றி.

லக்ஷ்மி & பாலசுப்ரமணியன்

லதா & ராஜேந்திரகுமார்

T. ஸ்ரீ ராமன் & பத்மா

சாந்தி ஜெயராமன்

V. பாலசுப்பிரமணியம் & பானுமதி



# ஷ்ரத்தாஞ்சலி

திருமதி **பார்வதி தியாகராஜன்** அவர்கள் தனது பதினைந்தாவது வயதிலேயே திருமணம் செய்து கொண்டு, 60 ஆண்டுகள் மகிழ்ச்சிகரமாக இல்வாழ்க்கை அமைத்துக் கொண்டு, 61ம் ஆண்டு திருமண நாளுக்கு 9 நாள் முன்பு இயற்கை எய்தினார் (20-6-2013). பெரிய குடும்பத்தைச் சேர்ந்த இவரின் 60 ஆண்டுகால இல்வாழ்க்கையின் அநுபவபாடங்கள் மூலம் இளைய தலைமுறையினருக்கு சாஸ்திர, சம்பிரதாயங்கள், சடங்குகளுக்கு வழிகாட்டியாக விளங்கினார். எந்த நிகழ்ச்சியாக இருந்தாலும் இவரிடம் விளக்கம் கேட்டு நடைமுறைபடுத்தலாம். நேற்று பார்த்தோம், இன்று திருமணம், நாளை விவாகரத்து என்ற இக்கால இளைஞர் சமுதாயத்திற்கு, அக்கால முறைப்படி, 5 நாட்கள் இல்லாவிட்டாலும் 3 நாட்களாவது திருமணத்தின் புனிதத்தன்மையை உணர்த்தும் வகையில் சடங்குகளைச் செய்தும், ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் தன் இனிய குரலால் சம்பிரதாய பாடல்களை பாடியும் திருமண தாத்பர்யத்தை உணர்த்தியவர். மாமி பாடும் பாடல்களில், உறவினர்களின் மேன்மை, அவர்களின் கடமை, பெண்ணுக்கும், பிள்ளைக்கும் ஏற்பம கூச்ச உணர்ச்சிகளை மெதுமெதுவாக களைவது என்று, பிரமிக்கத்தக்க சொல்லாடல்கள் வியப்பிற்குரியதே! நம் நாட்டில், பழைய சம்ப்ரதாயங்களைத் தூக்கி எறிய, இளைய தலைமுறையினர் முனைந்த விட்டாலும், வெளிநாடுகளில் குடியேறிய தமிழர்கள் நம் கலாச்சாரத்தை மிகவும் கொண்டாடி வருகின்றனர். மாமியின் பாடல்கள் அங்கும் பரவினால் கலாசாரம் மேலும் பண்படும்.

குடும்பப் பணிகள் மட்டுமில்லாமல், ஆன்மிக, சமுதாயப் பணிகளிலும் திருமதி பார்வதி அவர்கள் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டவர். நங்கைநல்லூர் அர்த்தநாரீஸ்வரர் கோயிலில் குடி கொண்டுள்ள ஸ்ரீ துர்கையையே தத்து எடுத்துக் கொண்டவர். 'சாந்தி துர்கா சுவாசினி மண்டலி' என்ற

அமைப்பை உருவாக்கி பல பெண்மணிகளைச் சேர்த்துக் கொண்டு இவர் செய்த அறப்பணிகள் மிகவும் போற்றுதற்குரியவை. ஆன்மீக அன்பர்கள் நிதி உதவியுடன், துர்கை அம்மனுக்கு லலிதா சஹஸ்ர நாமத்தின் முதல் அக்ஷரங்களைக் கொண்டு, 1008 தங்க காசுகளில் காசு மாலை அணிவித்தார். வெள்ளிக் குத்து விளக்கு, பூஜை பாத்திரங்கள் என்று தன் இறுதி மூச்சு வரை துர்கைக்கு வாங்கி, அவளுக்கு கைங்கர்யம் செய்வதையே கடமையாக நினைத்தார். குத்து விளக்கு பூஜைகள், நவராத்திரி பூஜைகள் ஏற்பாடு செய்து, பெண்களின் மன நிம்மதிக்கு வழி வகுத்தார். கோயிலில் துர்கை சந்நிதானத்திற்கு எதிரே பக்தர்கள் அமர, கூரை வேய ஏற்பாடு செய்துள்ளார். துர்க்கையால், அர்த்த நாரீஸ்வரர் கோயில் பிரசித்தப் பெற்றது என்று சொன்னால் மிகையாகாது. மட்டுமல்லாமல் பல வேத சதஸ்கள், ஆன்மிக நிகழ்ச்சிகள் போன்றவற்றிற்கு லட்சக்கணக்கான ரூபாயை வசூலித்துக் கொடுத்துள்ளார். பல முக்கிய ஸ்தலங்களுக்கு ஆன்மிக சுற்றுலா ஏற்பாடு செய்துள்ளார்.

கூப்பிடுபவர்கள் இல்லத்திற்கு குழுவினருடன் சென்று நவராத்ரி, ராதா கல்யாணம் போன்ற நிகழ்ச்சிகளில் பாடி, கும்மி, கோலாட்டம், பின்னல் கோலாட்டம் என்று அசத்தி விடுவார். பொது நிகழ்ச்சிகளில் சின்னத்திரை முதல் வணிகக்கிளை திறக்கும் நிகழ்ச்சிகளிலும், சாந்தி துர்கா சுவாசினி மண்டலியினர் கலந்து கொண்டு பக்திப் பாடல்களைப் பாடியுள்ளனர். குறிப்பிடத்தக்கது ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ், கோடம்பாக்கம் கிளை திறப்பு விழா.

ஆண்டாள் கண்ணனுடன் ஐக்கியமானதுபோல், திருமதி பார்வதி அவர்களும், துர்க்கையுடன் ஐக்கியமாகிவிட்டார் என்றே நான் நினைக்கிறேன். தெய்வ ரூபமாக இருந்து, வரும் தலைமுறையை ஆசிர்வதிக்க வேண்டும் என்றே விரும்புகிறேன்.

சென்னை - 61

10 - 7 -2014

**பத்மாமணி**

மூத்த பத்திரிகையாளர்

# கௌரி கல்யாணம்

1

கௌரி கல்யாணம் வைபோகமே (கௌரி)
உச்சிதவ பந்தலிலே உயர்ந்த சிம்மாசனத்தில்
உமையுடனே ஈஸ்வரரும் உல்லாசமாய் வீற்றிருந்தார்
(கௌரி)
முத்து முத்தாய் கோலமிட்டு குத்து விளக்கேற்றி வைத்து
மீனாட்சி அம்மனுக்கு பட்டாடை உடுத்தி (கௌரி)
வசுதேவ தவபாலா அசுர குல காலா
சசிவதன ருக்மிணி சத்யபாமா லோலா (கௌரி)
ராவம்மா துலகம்மா ரம்மிமாய் அம்மா
ராவம்மா ஜானகிமா ரமணி கல்யாணி (கௌரி)

# மாலை மாற்றுதல்

(2)

1. மாலை மாற்றினாள் கோதை மாலை சாற்றினாள்
மாலடைந்து மதிலரங்கன் மாலை அவர்தன் மார்பிலே
மையலாள் தையலாள் மாமலர் கரத்தினால் (மாலை)
பூமாலை மாற்றினார் சுவாமி மாலை சாற்றினார்
ரங்கராஜனை எங்கள் அன்பர் நேசனை
ஆசிகூறி பூசுரர்கள் பேசிமிக்க வாழ்த்திட
அன்புடன் இன்பமாய் ஆண்டாள் கரத்தினால்
(மாலை)

சுவாமி மாலை மாற்றினார்.

(3)

2. மன்மதனுக்கு மாலை இட்டாயே அம்மா தாயே (மன்ம)
மன்மதனுக்கு மாலை இட்டு, மாலை தனை
கைபிடித்து கனத்த நோன்பு நூற்றல் போல்
கிடைத்தது எங்கள் பாக்கியம் என்று (மன்ம)
செந்தாழை ஓடையிலே மந்தாரை பூத்தது போல்
இந்திரரும், சுசந்திரரும், சந்திரரும் இவர்தான் என்று
(மன்ம)

## ஊஞ்சல் பாடல்கள்

4

I

1. கண்ணூஞ்சல் ஆடியிருந்தாள் காஞ்சனமாலை
(பெண்ணின் தாயார்) மனம் மகிழ்ந்தாள் (கண்)
2. பொன்னூஞ்சலில் பூரித்து பூஷணங்கள் தரித்து,
ஈஸ்வரனாரிடத்தில் (மணமகன் or மணமகள்)
ஆசைகள் ரொம்ப வைத்து (கண்)
3. அசைந்து சங்கிலி ஆட உசந்து ஊர்வசிபாட
இசைந்து தாளங்கள் போட, மீனாட்சி கொண்டாட
(கண்)
4. உத்தமி பெற்ற குமாரி நித்ய சர்வாலங்காரி
பக்தர் பாபசம்ஹாரி, பத்மமுக ஒய்யாரி (கண்)
5. (பெண்ணின் பிறந்த ஊர், பெயர் மற்றும் மணமகன் ஊர் பெயர்)
அழகுடன் அமர்ந்து அங்கே அன்புடன் ஊஞ்சலாடி (கண்)

## ஊஞ்சல் பாடல்கள் (தொடர்ச்சி)

(5)

வைரமணி பந்தலிலே, ரத்ன மய ஊஞ்சலிலே,
ரகுராமன் சீதையுடன் ஆடுவதை பாரடி
(லாலி)

பவழ மணி பந்தலிலே முத்துமணி ஊஞ்சலிலே
சொக்கருடன் மீனாட்சி ஆடுவதை பாரடி (லாலி)
முத்துமணி பந்தலிலே தங்கமய ஊஞ்சலிலே,
முருகனவன் வள்ளியுடன் ஆடுவதை பாரடி (லாலி)
பொன்னான பந்தலிலே பூவான ஊஞ்சலிலே
மன்னன் கண்ணன் ராதையுடன் ஆடுவதை பாரடி - லாலி

Or மணமகள் Or மணமகன் பெயருடன் ஆடுவதை

பாரடி - லாலி.

III. ஆடினார் ஊஞ்சல் சர்வேஸ்வரர் (6)
நாடினார் நாரத வீணை விலாசா (ஆடி)
பூர்வத்தில் காஞ்சனமாலை, பூரண தவசுகள்
செய்த தாயே (ஆடி)
கல்யாண கோலங்கள் கொண்டு, கடைக்கண்ணால்
அடிக்கடி வேணியை (மணமகள்) கண்டு (ஆடி)

## 8. நலங்கு

ராகம் - நாத நாமக் கிரியை

பச்சை வண்ணனே எந்தன் பிராணபதியே உந்தன்
பாதத்தில் நலங்கிடுகிறேன்.
அச்சுதனே எந்தன் அந்தரங்க துரையே
அரிய அயன் பணிந்திடும் கமல பொற்பாதனே
கௌசலை பாலனே, கதிர்குலச் சோமனே
கல்யாண ராகவனே!
கௌசிகன் வேள்வியை காத்த கம்பீரனே,
கல்லை பெண்ணாக்கிய கமல பொற்பாதனே

# கப்பல்

(9)

பார் மீது ........................ கீர்த்தி பெற்ற
பிரும்ம குலம் ............ என்று சொல்லும்
சீருற்ற பிராமணர்கள் செய்யும்
கொடுமைகளை நான் என் சொல்வேன்?
அருமையுடன் எனை ஒத்த மைந்தர்கள் தம்மை
ஐந்து வயதானவுடன் பள்ளிக்கனுப்பி
அரை கிளாஸ், முதல் கிளாஸ் அழகுடனே கடந்து
பர்ஸ்ட் பார்ம் என்று சொல்லும் முதல் வகுப்பு வந்ததுமே
ஆங்கிலம், இந்தி, சமஸ்கிருதமோடு மாறாத
தாய் பாஷை துலுக்க பாஷைகளுடனே
கன்னட, பாஷைகள் மற்றுமுள பாஷைகள்
FA, BA முதல் இன்ஜினியர் படிப்பென
அவரவர் இயன்ற மட்டும் ஆங்கிலம் படித்து,
அழகான கன்னிகையை மணம் புரிந்து கொள்ள,
அந்தஸ்துக்கு ஏற்றபடி சீர்வரிசை சொல்ல,
அத்தை பெண் என்றாலும் அழகு போறாது,
மாமா பெண் என்றாலும் மனம் போலச் செய்யார்

சொந்தத்தில் பெண் கொண்டால் தொந்தரவுமிகும்
ஜாதியில் பெண் கொண்டால் சச்சரவுமிகும்
ஆயிரக்கணக்கில் செலவிற்கு வேண்டும்
அதற்கேற்ற வெண் பட்டு கதர் வேட்டி வேண்டும்
வெள்ளிக் கூஜா, சைக்கிள், ரிஸ்ட் வாட்ச் வேண்டும்
வெள்ளி, வெண்கலம், ஈயம் பாத்திரம் வேண்டும்
படிக்க வைத்த பெரியோர் பணத்தாசை கொண்டு
வரதட்சிணைஎன்னும் வரிப்பணம் வாங்கி
இந்த விதமாகவே பணம் பறிக்க எண்ணி,

ஏற்றமுடனே அவர்கள் கூட்டமோடு சொல்ல
பெண்களை பெற்ற தகப்பனும் தாயும்
பணம் காசு நோட்டுகளை மூட்டையாய் கட்டி
பெற்றோரை பார்த்து அவர்சம்மதமும் பேசி
ஜாதி குலம் தெரியாமல் சம்பந்தம் செய்து
கையில் மூவாயிரம் கண்டிப்பாய் கொடுத்தால்
காலை காபிக்கு கடும் கோபம் கொள்வார்
இராப் போஜனத்திற்கு ஆரவாதிப்பார்.
நலங்குஞ்சலது நாகரீகமில்லை
அவர் போஜனமிது கர்நாடகமே
இப்படி இவர்களின் விவாகம் நடக்க
ஏந்திழையாள் பெண்ணும் புருஷன் வீடேற
பெண்ணிற்கு துணையாக தாய்மாரும் வந்து
தம்பிமாரோடு தந்தையும் வந்து
சொந்தமாய் அமர்ந்து மாமியும் மகிழ்ந்து
மனைவியாலே நல்ல மகிமையுண்டாச்சு
மாமனாராலே நல்ல உத்தியோகமாச்சு
என்றுமே அவர்கள் மனமாற வாழ்த்தி
மாமியார் கை மருந்தால் மருமகனும் மயங்க,
மகளே இது என் பாக்கியம் என்று சொல்ல
எத்தனையோ குடும்பங்கள் இந்த விதமாச்சு.
ஏலேலோ.............ஏலேலோ......
இந்த கப்பல் பிள்ளையை விற்ற கப்பல்.

## நலங்கு (2)

(10)

கண்ணா கண்ணா உனையே நாடி
நலங்கிடவே நானும் வந்தேன்
நாழியாச்சுதே நாக சயனா
நளின பொற்பாதம் தருவாயே - கண்ணா

வேணுகான கோல கிருஷ்ணா
பாரிஜாத வனஜ நயனா
பன்னீர் பூச்செண்டு ஆடுவோம்
தாமரை பூச் செண்டாடுவோம் - கண்ணா
முத்துவைத்த பந்தலில் மோகனாங்க நாமிருவரும்
பன்னீர் பூச்செண்டு ஆடுவோம்
தாமரை பூச் செண்டாடுவோம் - கண்ணா

## பூச்செண்டு ஆடுதல் (3)

(11)

பந்தாடினார் பரமசுந்தரர்
பாண்டியராஜன் பெண்ணோடு
பாங்கியர் கீதங்கள் பளித்துதிக்க
பதினெட்டு வாத்தியங்கள் முழங்க - (பந்தாடினார்)

சந்திரசேகர் சிந்தை பூஜித்து
செந்தாமரை மலர் எடுத்து
ஓங்கியும் அயலன் நேராக அடித்தார்
தாங்கித் தடாதகை பிடித்தாள் - (பந்தாடினார்)

பக்கத்தில் தோழர் பரிகாசம் செய்ய
பவானி பூப்பந்தை எறிய
நெற்றிகள் வேர்த்து நிலத்திலே சொறிய
முத்தாகாரம் மார்பில் பதிய - (பந்தாடினார்)

வெட்கத்துடன் வேதவல்லியை
சொக்கரும் சற்றே கடைக்கண்ணால் கண்டு
வாச்சுது மீனாட்சி பிரியாதான் நமக்கென்று
பூச்செண்டு இரு கையில் கொண்டு - (பந்தாடினார்)

அந்தமுள்ள சுந்தரி மணாளன்
அழகுடன் பந்தை எடுத்தான்
சுந்தரியும் பூச்செண்டை எடுத்து
செந்தாமரை கையால் உருட்ட - (பந்தாடினார்)

அன்புடன் மேனகை அம்மனும் மகிழ்ந்து
அன்பர் தம் கண் நோக்க
ஆனந்தமாகவே அவரும் சிரிக்க
மங்கள ஆரத்தி எடுத்தாள் - (பந்தாடினார்)

## பெண் ஆண் பத்தியம்

க்ஷீராப்தி ஸயனனே சின்மயானந்தாவே
தேவர் குறை தீர்க்க வந்த கருடத்வஜனே
மாறாத ஆனந்தக் கடல் தன்னிலே முகிழவைத்த
மன்மதனே எந்தன் கண்ணன்தானே

பாராளும் சிசுபாலன் தன்னை அவமானம் செய்த
பரம கல்யாணனே ஒய்யாரனே
தீராத மனக் கவலை தீர்க்க வைத்தீரே
சிறுபுத்தி ருக்மணனை அவமதித்தீரே
பேரானந்தம் தன்னில் என்னை மகிழ வைத்தீரே
பூரண வடிவாக சேவை தந்தீரே!

## (புருஷ) பத்தியம்

(13)

1. கண்மணி ருக்மணி என்னுடைய பூஷணி
கனக ஒய்யாரி நீ கமலவதனீ
மின்னல் கொடியும் நீ விண்ணவர் பணியும் நீ
விளங்கவே உலகத்தில் வந்தவளும் நீ.

2. சொர்ணப்ரதினி நீ ஜோதி ரூபிணி
ப்ரசன்ன வடிவம் நீ பொற்கொடியும் நீயே
கன்னல் கரும்பும் நீ - கற்கண்டு ரசமும் நீ
உன்னத மானதோர் உற்ற ரஞ்ஜனி

3. செந்நெல் விளைந்திடும் சுகவாஸீ நீயே
சிருங்கார மானதோர் வதனியும் நீயே
கருணைக் கடல் போன்ற குணமும் நீயே
கல்யாண குணசீல வதனி வாராய்

## சம்மந்திப் பாட்டு (14)

1. லாலி லாலைய்ய லாலி சம்பந்தி
அறையிலே கன்தலாள ஊரிலே ரொம்ப
ஜோலி சம்பந்தி பாரெங்கும் செய்வோாகேலி

2. கண்டிக்குபோய் வருவாள் - சம்பந்தி
காட்டரளி வாங்கி வருவாள்
கொண்டையில் சூட்டிக் கொள்வாள் - சம்பந்தி
குலுங்குவாள் லாலி ......... லாலி

3. மலையாளம் போய்வருவாள் - சம்பந்தி
மருக்கொழுந்து வாங்கி வருவாள் மகிழ்வாக
சூடிக் கொள்வாள் சம்பந்தி - மயக்குவாள்
லாலி ............ லாலி

4. குச்சிலி பொட்டுமிடு - கூசாமலமையு மிட்டு
மெச்சியே தன்னைத் தானே
மயக்குவாள் ............ லாலி ............. லாலி

1. சாப்பிடுவதில் சம்பந்தி கெட்டிக்காரி
மிக சம்ப்ரமாகவே சாப்பிடுவதில் கெட்டிக்காரி

2. கூப்பிடாத ஆத்தில் கூசாமலேஓடி
காப்பி ரவை உப்புமா காணாமலே திருடி
சாப்பிடுவதில் கெட்டிக்காரி சம்பந்தி

3. மூக்கை உறிஞ்சிக் கொண்டு மொழங்காலை
தடவிக் கொண்டு நாக்கை நீட்டிக் கொண்டு
நச்சி நாலு ஜாமத்தில் சாப்பிடுவதில்
கெட்டிக்காரி சம்பந்தி.......................

## கதவு திறக்கும் பாட்டு (15)

1. மலைய ராஜகுமாரி மங்கையே மாது நான்
சங்கரர் தானடி மானே
சொர்ணக் கதவைத் திறவடி எனதேனே

2. விந்தையுடன் நடந்து சங்கரி பொற்கதவை
சிக்கெனத்தாள் திறந்தாள் மாது
சொர்ணக் கதவை திறந்தாளப்போது

3. அஞ்சன விழியாளே ஆயாஸமாக வந்தேன்
வெண் சாமரம் வீசடி மானே
திவ்ய பரிமளம் பூசடி தேனே

4. அறுகு சிரஸில் வைத்து விபூதியணிந்தோர்க்கு
பரிமள கந்தமேது சுவாமி
உமக்கு பரிமள கந்தமேது சுவாமி

5. அர்ச்சுனன் பூஜை செய்தான் அளவற்ற கந்த புஷ்பம்
வாஸனை வீசுதடி மானே
திவ்ய பரிமளம் வீசுதடி தேனே

6. எனையாளும் ஈஸ்வரரே இளைப்பு மிகுந்ததென்ன
எந்தனிடத்தில் சொல்லும் சுவாமி
நிஜம் எந்தனிடத்தில் சொல்லும் சுவாமி

7. அந்தரவனந்தன்னில் அடமுடன் பத்மாசுரனை
அதட்டி வந்த இளைப்பு பெண்ணே
என்னை மிறட்டி வந்த இளைப்பு கண்ணே

8. பரஞ்சோதியாய் நிறைந்த பரமசிவமே உந்தன்
பக்கத்தில் காயமென்ன சுவாமி
இட பக்கத்தில் காயமேது சுவாமி

9. வெந்த பிட்டுக்காக உந்தன் தகப்பன் கையால்
சந்தில் அடிபட்டேண்டி மானே நானும்
பிரம்பால் அடிபட்டேண்டி தேனே

10. கொஞ்சும் விழிகளெல்லாம் கஞ்சமலை போலே
கொஞ்சம் சிவந்ததென்ன சுவாமி
விழிகள் கொஞ்சம் சிவந்த தென்ன சுவாமி

11. பக்தியாய் பாணனென்னை சிரத்தையாய் பூஜை செய்தான்
நித்திரை அற்றெழுந்தேன் பெண்ணே
கொஞ்சம் நித்திரை யற்றிருந்தேன் கண்ணே

12. சங்கரர் தேக மெலாம் தாங்காமல் வேர்வை என்ன
சாகஸம் செய்யாதேயும் சுவாமி

13. கவிபாடும பக்தனுட கவலைகள் தீர்க்கவென்று
விறகு சுமந்தேனடி பெண்ணே
கட்டு விறகு சுமந்தேனடி கண்ணே

14. கோமள வடிவான குந்தள நாயகியே
கோபங்கள் செய்யாதேடி மானே
என் மேல் பேதங்கள் எண்ணாதேடி தேனே

15. முத்து மூக்குத்தி நவரத்தின மணிஜ்வலிக்க
கர்த்தன் பாதத்தை வந்து நாடினாள் தேவி
கண்டு வணங்கிக் கொண்டாடினாள்

16. சங்கீதங்கள் கோஷிக்க சங்கரியும் பூஜித்து
மங்களத் தாம்பூலம் மாற்றினாள் தேவி
தங்கக் கதவை மெள்ள சாத்தினாள்

17. மந்தஹாச சுந்தரி சிந்தை மகிழ்ந்தபோது
கந்தங்கலந்து மார்பில் பூசினாள்
அதிசந்தோஷமாய் சாமரை வீசினாள்

18. ஆணி முத்துமாலை ஹாரங் களுங்குலுங்க
மாணிக்கப் பொன் கவரி வீசினாள்
கையில் வீணை எடுத்து கீதம் பாடினாள்

19. சியாமள வடிவான சுந்தர நாயகி மேல்
காமதகனர் மெத்த மோகித்தாள்
அதிபிரேமையுடன் உருகிப் பாவித்தார்

20. அஷ்டலக்ஷ்மி பதியாம் ஹரி சகோதரியப்போ
இஷ்ட நாதரிடத்தில் பூரித்தாள்
அதிமட்டற்ற ஆனந்தம் சுகித்தாள்.

21. பச்சைப் பதக்கம் மார்பில் உச்சுதமாய் ஜ்வலிக்க
அச்சத சோதரியும் மோகித்தாள்
அதி இச்சையுடன் பாவனை பாவித்தாள்

## கும்மி பாட்டு

1. ரோஜாப்பூ கொண்டு வந்தே எங்கள்
ராஜேஸ்வரியை பூஜை செய்தால்
தேசாதி தேசம் மெச்சும் ஒரு
ராஜா போல வாழச் செய்வாள்

2. முல்லைப்பூ கொண்டு வந்தே எங்கள்
மோகனாங்கியை பூஜை செய்தால்
இல்லை என்று சொல்லாமலே
தனம் அள்ளி அள்ளி தந்திடுவாள்

3. மகிழம்பூ கொண்டு வந்தே எங்கள்
மாதங்கியை பூஜை செய்தால்
மணமாகாத கன்னியர்க்கு
திருமணமும் நடத்தித் தந்திடுவாள்

4. ஜாதிப்பூ கொண்டு வந்தே எங்கள்
சுயம்ஜோதியவளை பூஜை செய்தால்
ஓதி உணரா வித்தை யெல்லாம் தந்து
மேதை என்றே ஆக்கிடுவாள்

5. தாழம்பூ கொண்டு வந்தே எங்கள்
தாக்ஷயணியை பூஜை செய்தால்
வாழாப் பெண்ணை நாதருடன்
வாழும்படியாய் செய்திடுவாள்

6. பத்திரம் பல கொண்டு வந்தே
எங்கள் பகவதியை பூஜை செய்தால்
இத்தரைமேல் உள்ளவர்க்கே அவள்
புத்ர பாக்யம் தந்திடுவாள்

7. தாமரப்பூ கொண்டு வந்தே எங்கள்
சியாமளியை பூஜை செய்தால்
தாமதம் செய்யாமலே தாலி
பிச்சை தந்திடுவாள்

8. மல்லிகைப்பூ கொண்டு வந்தே எங்கள்
மாதேஸ்வரியை பூஜை செய்தால்
பில்லி சூனியம் ஏவல் எல்லாம்
பிறையே ஓடச் செய்வாள்

9. செண்பகப்பூ கொண்டு வந்தே எங்கள்
அம்பிகையை பூஜை செய்தால்
ஜென்மாந்தர பாவம் எல்லாம்
தீர்த்து விலக்கி ஓட்டிடுவாள்

10. இருவாட்சி கொண்டு வந்தே எங்கள்
இரண்மயியை பூஜை செய்தால்
மருள சூழ்ந்த நெஞ்சினிலே
ஞான ஒளிவீச்ச செய்திடுவாள்

11. அரளிப்பூ கொண்டு வந்தே எங்கள்
அராள கேசியை பூஜை செய்தால்
அருள் கூர்ந்து ஆதரித்து
அநுக்கிரகம் செய்திடுவாள்.

## ஆரத்திப்பாட்டு (17)

சங்கரன் சங்கரி தேவி மானோகரி
சந்திர கலாதரி அம்பிகையே
எங்கும் நிறைந்த இணையடி தொழும்
பேர் எனக்கே அருள் பைரவியே
மரகர சியாமள ரூபிணியே
மகிஷாசுர மர்த்தினி அம்பிகையே
பரம கிருபாகரி பார்வதியே
பரமேஸ்வரியே ஜெகதம்பிகையே
மங்களமே தந்து எங்களைக் காத்திட
மனமுவந்தே உடன் வருவாயே
ஐங்கரனைப் பெற்ற அன்னையே
உன்னை
நம்பிடும் எம்மையே காப்பாயே!

## சீமந்த பாட்டு (18)

சங்கரரும், லக்ஷ்மியும் சரஸ்வதியுமாய்
மங்களமாய் பூஜை பண்ணி மனமகிழ்ந்தார்.
சீருடனே பாலகாண்டம் சிறக்க பாடவே
சித்தி விநாயகரின் பாதம் பணிந்தேன்.
பூமிதன்னில் தசரதமும் புண்ணியம் செய்து
புத்திரகாமேஷ்டி யாகம் செய்தார் அற்புதமாகவே
திருமூர்த்தி மூவர்களும் சித்தமிறங்கி

பாயசத்தை தான் கொடுத்தார் பாத்திரத்தில்
பாயசத்தை வாங்கி ராஜன் பரிபூர்ணமாய்
மங்கையர்க்குத் தான் கொடுத்து மணமகிழ்ந்தார்
கௌசலை அதை வாங்கி அற்புதமாக
இருவருக்கும் தான் கொடுத்து தானும் புஜித்தாள்.
தேவர் வசிஷ்டரெல்லாம் மனமகிழவே ஸ்திரி
வயிற்றில் அபிராமர் அவதரித்தாரே.
மாசம் மூன்று ஆனவுடன் பெண் கிளிமார்க்கு மதிமயங்கி
முகம் வெளுத்து மசக்கையும் செய்ய
முறுக்குத் தேன் குழல் வேணும் கர்ச்சிக்காய் வேணும்
குஞ்சாலாடும், சோமாஸி, ஜிலேபியும் வேணும்
இட்டிலி மோதகம் வேணும், எள்ளுருண்டை வேணும்
சுடச்சுட தோசை வேணும், சுண்டைக்காய் வேணும்.
ஒரு சேர் நெய்விட்டு ஊத்தப்பம் வேணும்,
அரைசேர் நெய் விட்டு அடை தட்ட வேணும்.
லட்டு வேணும், லாடு வேணும், பதிர்பேணி வேணும்
புட்டு வடை, பொங்கலும் வேணும்.
இட்டிலி வேணும்.....
திரிபடாத திரட்டுபால் அதிரசம் வேணும், மசக்கைக்கு
திங்க இப்போ மாம்பழம் வேணும்.
போகவரதிங்க இப்போ பொருளங்காய் வேணும்
அடிக்கடி திங்க இப்போ அவில் சீடை வேணும்.
தயிரும் சாதம், புளியஞ் சாதம், தேங்காய் சாதமும்,
சர்க்கரை பொங்கல் வெண் பொங்கல் சாதமும் வேணும்
ஏட்டோடு தயிரும் வேணும், உப்பிஞ்சியும் வேணும்
வேப்பிலைகட்டி மிளகாய் வடுமாங்காய் வேணும்.
அருமையாய் கொண்டாட அத்தைமார் வேணும்
பெருமையாய் கொண்டாட பாட்டியும் வேணும்.
வேணதல்லாம் வாங்கிப் போட தோப்பனார் வேணும்
கேட்டதெல்லாம் பண்ணித் தர தாயும் வேணும்

உகப் உகப்பாய் செய்ய இப்போ உடன் பிறந்தா வேணும்
உட்கார்த்தி செய்ய இப்போ மன்னியும் வேணும்
சீயங்காய் மஞ்சள் அரைக்க சிறுதங்கை வேணும்
சிக்குத்தலை தேய்க்க இப்போ சின்னம்மா வேணும்
நாலு மாசம் ஆனவுடன் மசக்கை தெளிந்து
வளர்பிறையில் ஐந்தாம் மாசம் வளையல் காப்பிட்டார்கள்
வளையல் அடுக்கி காப்பிட்டு மருதாணியுமிட்டு
அருமையாக அத்தை வந்து எண்ணெயும் தேய்த்தாள்.
தசரதரும் 6 மாதம் சீமந்தம் பாந்தமாய்
பெண்கிளிக்கு மூக்குப் பிழிந்தார்.
அத்தி மொக்கு ஆல மொக்கு அம்மியில் வைத்து
அழகாக கன்னியா பெண்கள் மகிழ நறுக்கினார்கள்.
முத்து முத்தாய் உடன் பிறந்தான் மித்தத்தில் நின்று
பட்டெடுத்து மஞ்சள் தடிவி பாங்காய் கொடுத்தார்.
தசரதரும் வாங்கி அதை சுற்றி வளைத்து
பாந்தமாய் பெண் கிளிக்கு மூக்கு பிழிந்தார்.
வெட்டிவேர் கதம்ப முல்லை, சவ்வந்தி ரோஜா
பூங்குழலி நாத்தனாரும் பட்டு வாங்கினாள்.
சட்டவதி நாத்தனாரும் சேலை வாங்கினாள்.
ஆறும் இரண்டும் எட்டு மாசம் ஆனவுடனே
எண்ணெய் அப்பம் சமைத்துக் கட்டி ஏற்றி இறக்கினார்.
எட்டு இரண்டும் பத்து மாசம் ஆனவுடனே
பிரசவ காலம் வந்ததிப் போ பெண்கிளி மார்க்கு
முத்து முத்தாய் நெற்றி வேர்க்க முகங்களும் வாட
பெற்றெடுத்தாள் பாலகர்களை முத்து முத்தாக.
அழகான சௌம்ய வாரம் புஷ்ய நக்ஷத்திரம்
கடக இராசி கன்யா லக்னத்தில் இராமரும் பிறந்தார்.
இராமர் பிறந்தவுடன் இராசன் மகிழ்ந்து
சரயுவில் போய் ஸ்நானம் செய்து நியமங்கள் செய்தார்.
தனமுடனே வெள்ளி தட்டில் வெள்ளியும் பொன்னும்

வேணதெல்லாம் வேணபோர்க்கு விநதானம் செய்தார்
ஆறுநாளும் ஆனவுடன் ஏழாம் நாளைக்கு அருமையா
அத்தை வந்து காப்பு மீட்டார்கள்.
பத்து நாளும் ஆனவுடன் பதினொறாம் நாளில்
சவரங்கள் செய்து வந்தார் சந்தோஷமாக.
தங்கத்தினால் தொட்டிலிட்டு பொன் சங்கிலியும்
ஸ்ரீராமரை தொட்டிலிட்டு தாலாட்டினார்கள்.
ஆராரோ, ஆரிராரோ ............... (4 தடவை)
ஒரு வயது ஆனவுடன் இராமச்சந்திரருக்கு
ஆண்டு நிறைவு செய்தார்கள் அற்புதமாக
மூன்று வயது ஆனவுடன் முத்து ராமர்க்கு குடுமி
கல்யாணம் செய்தார்கள் சந்தோஷமாக.
ஐந்து வயது ஆனவுடன் அபிராமருக்கு
வாத்தியாரைத் தான் அழைத்து வாசிக்க வைத்தார்கள்
ஏழு வயது ஆனவுடன் ரகு ராமர்க்கு
புரோகிதரை தான் அழைத்து பூணூல் போட்டார்
பண்ணிரன்டு வயது ஆனவுடன் பட்டாபி ராமர்க்கு
வில்லொடித்து ஜானகியை விவாகம் செய்தார்.
தேவர்கள் மனமகிழ ஆடினார் ஊஞ்சல்
இராசர்கள் பார்த்திருக்க ஆடினார் ஊஞ்சல்

## **பெண் தாலாட்டு** (19)

சிந்தை மகிழ்ந்து செய்ய சங்கரியை தாலாட்ட
கந்தனக்கு முன் பிறந்த கற்பகமே உன் அழகே
பாடுடென் வாழ இம பார்வதிக்கு மேலாக
தேவரசிகன் துடித்து மனதொரிய
ஏழுலகம் போற்ற இருமான் மனம் குளிர
தரணியில் அவதரித்த சிவசங்கரியே சொன்னார்கள்.
சித்தர், தேவர்களும் யோகிகளும் கண்டு களிக்க

கொற்றவன்னார் பர்வததில் இதை தீர்த்த குஞ்சலமோ!
சங்கரியே தாயே சகலலோக அந்தரியோ!
வன்முறையை தீர்க்கும் மலையரசன் திருமகளோ.
மேதையுடை கண்மணியோ வேதாந்தத்து பொருளோ
ஆதிசிவனின் அரும்பாகம் பெற்றவளவோ!
ஜோதி சுடரொளியோ சுந்தர பூ நாயகியோ
பஞ்சாட்ஷரம் பொருளோ பரிபூரண நாயகியோ
கங்கையை தெளித்து புலி உடுத்து மேல் தோற்றத்து
சந்திரனைக் கூட சடசலித்தான் தேவியரோ
தத்தெடுத்து மெய் பொருளே ஈஸ்வரனார் நாயகியோ
பக்தர்கள் மனதில் உரையும் பரஞ்சுடரோ
சித்தாந்த யோகியர்கள் சிந்தை குடி கொண்டவளோ
திருபுரம் எரித்த சிவகாம சுந்தரியோ!
காளி எதிரில் வந்து கனக சபை மண்டபத்தில்
ஆரம் சிலம்புகளும் அசைந்தாடும் கிண்கிணியோ
கோல வளையும் கொத்தரும் கொன்றை குடையயை
மாலைகளையும் சூழ கடால பொழி திகழ
நீலகண்ட மூர்த்தி நிறைந்த கொலு மண்டபத்தில்
காலமுண்டார் பக்கத்தில் அமர்ந்த சிவசுந்தரியோ
இமலான் சிறு மகளோ இவ்வுலகில் ஈன்றவளோ!

ஆராரோ ஆரிரரோ, யார் அடிச்சு நீ அழறே! (20)
அஞ்சனக்கண் மை கரைய.
அத்தை அடிச்சாளோ அஞ்சு விரலாலே
பாட்டி அடிச்சாளோ பால் போட்டும் சங்காலே
சித்தி அடிச்சாளோ சீராட்டும் கையாலே
மாமன் அடிச்சானோ மல்லிப்பூ செண்டாலே
ஏதுக்கு நீ அழறே என்னுடைய கண்மணியே
பாலுக்கோ, மோருக்கோ, பழத்துக்கோ சர்க்கரைக்கோ

தோச்ச தயிருக்கோ சொல்லி அழ நான் தருவேன்.
ஆறிரண்டு காவேரி அதனடுவே ஸ்ரீ ரங்கம்
சுவாமி இரண்டு கையாலே தந்திரவியமோ
ஸ்ரீரங்கமாடி திருப்பார்கடலாடி
மாமாங்கமாடி, மதுரை கடலாடி
தைபூசமாடி, தவமிருந்து பெற்றவனோ
கண்ணுக்கு மை எழுதி கஸ்தூரி பொட்டுமிட்டு
திருவிடி அழித்தாளாம் தசரதனார் பாலகற்கே
சீதையுடைய கண்மணியோ, தசரதனார் பேர்களோ
கௌசல்யாள் பேர்களோ காகுஸ் தனார் (ராமர்)
கண்மணியோ

சிருஷ்டிக்கும் பிரம்மாவோ ஜகத்துக்கு அதிபதியோ
இஷ்டமிகு லீலைசெய்யும் யசோதை புத்திரரோ
திருப்புரம் எரித்தவரோ சிவனாமர் ருத்திரரோ
மருத்துவம் உரைத்தவருக்கே நீ மைந்தனாய் வந்தவனே
ஆலிலைமேல் பள்ளிகொள்ளும் ஆதிமூலப்பொருளோ
நீ கோலகலத்துடனே குழந்தையாய் வந்தவனோ
- ஆராரே ஆரிரரோ.

## நகைசுவை தாலாட்டு (21)

மாமியார் : மின்னா மினிக்கியரே, விஜயருடைய தேவியரே
தண்ணிக்கு போனடதே தாமசங்கள் ஏதழயோ!

மாட்டுப் பெண் : இருபுறம் காவேரி கரை புரண்டு ஓடுகிறது
அதுபார்த்து இருந்தேண்டி ஆம்படையான் தாயாரே
கச்சேரி கலையுமின்னே கணவன் வரப்போறான்

ஒரு நிலையாய் நின்னு பெரு நிலையார்
முத்தரித்தாள்
சோமன் அழகானா துப்புட்டா காராடா
உங்க அம்மாவும் என்னை அழுஅழுகச்
சொன்னாட
என் கல்லை பிளந்து கருங்கல்லார் வீடுகட்டி
என் கட்டின மண்டபத்தே நீ தொட்டில்
இடவந்தவனோ
சீதை மணவளா ஜகம்பெரிய கண்வளரா
என் இலங்கை அழிக்க வந்த ரகுராம
கண்வளரா
கண்வளரா கண்வளரா காகுஸ்தா கண்வளரா
மாய மானோட வலுவேகமாய் ஓடி
மாய மான் ஏய்து கொன்ற மன்னன்
மருமகனோ
கோடிக்கோடி குறையா பணம்தேடி
என் கோடி கொடிகள் கட்டும் கொற்றவனார்
உங்களய்யா
தங்கம் கவசம் வைத்து சாரட்டு வண்டியிலே
சிங்கம் போல் ஏறிவரும சீமானார் உங்கள்
அம்மான்
வெள்ளை குதிரைக்கட்டி விலைமதியா
வண்டிகட்டி
என் வெள்ளைகார துரையே கொள்வாா
பெற்றகண்ணோ
அய் யரையர் நின்னு அனுதரிச்சு நான்
முதலால்
என் வையகம் எல்லாம் புகழும் வளர்த்தார்
பொன்தொட்டிலே
கண்ணான் சிறு சலங்கை காலில் கட்டி
விட்டார் உன் மாமன்
பொன்னால் சிறு சலங்கை கட்டி
மாணிக்ககட்டி வைரமிடை கட்டி

என் ஆணிப்பொன் தொட்டிலே
நீ வண்ணச்சிறு தொட்டிலாடி
ஆடி அம்மாவாசையிலே உன்னைப் பெற்றார்
ஆராயிரம்பேர் கன்னமிட
தேடி எடுத்தோர் திரவியமே கண்வளராய்
தை அம்மாவாசயிலே தனுஷ்கோடி நீராடி
பை அரவு (சர்பம்) சாந்திசெய்து நீ பாலகனாய்
வந்தனவோ

கணவன் : கருத்த முழியழகி காயம் பூ மேனியளே
என் இடை இருக்கு செம்பகத்தே என்ன
சொன்னா அம்மா நீ

மாட்டுப் பெண் : பீ முரத்தே பெருக்கிவைச்ச வாருகலே
என் ஆத்தங்கரை நாணலையும்
அம்மான்று அழைக்கணுமோ!

## மங்களம் (22)

மங்களமே சுப மங்களமே
விஜய ரங்க மன்னருடைய தேவி
சங்கராந்தியைக் கோரி ஆண்டாள் சௌரி
திருமஞ்சனம் பாரீர்
தங்கள் பல்லாகதினில் தகதகவென்று ஜொலிக்க
மங்கை வருகிறாள் பாரீர்
மாட வீதி யழகும் யீசங்க மாட வீதி யழகும்
எங்கும் நிறைந்தவள் பொங்கி மகிழ்ந்தவள்
மார்கழி நீராட வாரான்!

- மங்களமே